POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Da ... the People

# புரட்சி தலைவர் வேட்பாளர்கள் போட்டியின்றி வெற்றி

Regd. No. TN - MS (C) 244 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 4.2.1986 செவ்வாய் வெள்ளூர புதன் 5.2.1986 [இதழ் 105




பழனி உள்ளாட்சித் தேர்தலில் பிள்ளையார் சிலையை உடைத்து தி.மு.க. வினர் வேட்புமனு தாக்கல் செய்தனர். - செய்தி

## வானொலியில் இன்று புரட்சித் தலைவர் படப்பாடல்கள்

சென்னை. பிப். 4— இன்று (4ந்தேதி) இரவு 9-40மணி முதல்10-40மணி வரை சென்னைவானொலி விவிதபாரதி நிகழ்ச்சியில் பொன்மனச் செம்மல் புரட்சித்தலைவர்முப்பிறவி கண்டு தாயகம் திரும்பிய முதல் ஆண்டு நிறைவையொட்டி 'நல்லவன் வாழ்வான்' என்ற தலைப்பில் புரட்சித் தலைவர் படப்பாடல்கள் தொகுத்து வழங்கப்படுகின்றன,

கோவைத்தம்பி சார்பில் வழங்கப்படும் இந்நிகழ்ச்சியை கவிஞர் முத்துலிங்கம் தொகுத்து வழங்குகிறார்.

## கழகத்தின் வசம் நெகமம் தனி பேரூராட்சிகள்!

**கோவை, பிப். 4- புரட்சித்தலைவர் அவர்களின் வேட்பாளர்கள் இரண்டு பேரூராட்சிகளில் தலைவர்களாகப் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள்.**

பேரூராட்சி, ஊராட்சி ஒன்றியம், நகராட்சி தேர்தலுக்கு வேட்பு மனுத் தாக்கல் செய்தவர்கள் வாபஸ் வாங்க நேற்று கடைசி தினமாகும்.

தேர்தலில் போட்டியிடுபவர்களின் இறுதி பட்டியல் நேற்று வெளியிடப் பட்டது.

கோவை மாவட்டம் உடுமலைத் தொகுதி தனி பேரூராட்சித் தலைவராக கழக வேட்பாளர் திருமூர்த்தி போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இவரை எதிர்த்து தி.மு. கழகமோ அதன் அணிக் கட்சிகளோ வேட்பாளர்களை நிறுத்தவில்லை, சுயேச்சையாகவும் எவரும் போட்டியிட முன்வர வில்லை.

எனவே தனி பேரூராட்சித் தலைவராக புரட்சித் தலைவர் அவர்களின் வேட்பாளர் திருமூர்த்திபோட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார.

நாடாளுமன்ற அனைத்திந்திய அண்ணா தி. மு, கழகவேட்பாளர் அண்ணா நம்பி இந்தத் தகவலை நிருபர்களிடம் தெரிவித்தார்,

### நெகமம்

பெரிய நெகமம் பேரூராட்சி மன்றத் தலைவராக புரட்சித் தலைவரின் வேட்பாளர் கே.வி. சண்முகம் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

இவரை எதிர்த்துதி,மு. கழகமோ அதன் அணிக் கட்சிகளோ எவரும் போட்டியிட வில்லை.

ஊர் கூடி முடிவு செய்தது போல் பெரிய நெகமம் வாக்காளப் பெரு மக்கள் கே. வி. சண்முகத்தை ஒரேவேட்பாளராகநிறுத்தி வைத்தார்கள்.

இவர் சட்டமன்ற கழக உறுப்பினர் கே.வி. கந்தசாமியின் சகோதரர் ஆகும்.

### ஆரணி

ஆரணி நகராட்சி தேர்தலில் இரண்டாவது வார்டில் கழக வேட்பாளர் பாஸ்கர் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டார் இவரை எதிர்த்துப்போட்டியிட்ட ஐந்து வேட்பாளர்களும் போட்டியிலிருந்து விலகிக்கொண்டனர்.

எனவே புரட்சித்தலைவரின் வேட்பாளர் பாஸ்கர் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### அரக்கோணம்

அரக்கோணம் நகராட்சி தேர்தலுக்கு நான்காவது வார்டில் வேட்பு மனுத் தாக்கல் செய்திருந்த புரட்சித்தலைவரின் வேட்பாளர் தாமோதரன் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

### மதுராந்தகம்

மதுராந்தகம் நகராட்சிக்கு 11-வது வார்டில் போட்டியிட வேட்பு மனுத் தாக்கல்செய்து இருந்தவர் மேச்சேரி ஏழுமலை இவர் இந்திரா காங்கிரஸ் கட்சியைச் சார்ந்தவர் இவரை எதிர்த்து எவரும் வேட்பு மனுத்தாக்கல் செய்ய வில்லை.

எனவேகழக அணி வேட்பாளர் மேச்சேரி ஏழுமலை போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டார்.



## நியாயத்தின் பக்கம் நிற்போம்

எங்கள் (கழகம்) மீது மக்களுக்கு நம்பிக்கையில்லை என்று யாராவது சொன்னால் நான் சொல்லுவேன், மக்கள் அவர்களைத் தான் நம்ப வில்லை.

மக்களை நம்பி அவர்கள் தேர்தலில் நிற்க முடிய வில்லை.

அடுத்த தேர்தலுக்கு நிற்கும் வாய்ப்பும் அவர்களுக்கு இருக்காது.

நியாயம் எந்த பக்கம் என்பது உங்களுக்குத் தெரியும். நாட்டின் நலன் தான் நமக்கு முக்கியம்.

கொள்கையை சொல்லும் போது நியாயம் இருக்கிறதா என்று பாருங்கள்.

- புரட்சித்தலைவர்



## இன்றே செய்க! நன்றே செய்க!

கொழுந்துவிட்டெரியும் ஆர்வம் காரணமாகவும், கொள்கைப் பற்றுடன் பணியாற்றும் திறனாலும், கொதிப்பு மூட்டுவோர் பற்றிப் பொருட்படுத்தாது பணியில் ஈடுபடும் பண்பினாலும் நாம் மிக உன்னதமானதோர் வளர்ச்சியைக் கண்டுள்ளோம்.

இதுகண்டு பொறாதாரும், இதற்கு நாம் தகுதியல்ல என்று எண்ணுவோரும் இது நமக்குக் கிடைக்காமற்போயிற்றே என்று ஏங்குவோரும் ஏராளமாக உள்ளனர். அவர்களில் பலர் வெளியில் இருந்து நமக்கு வேதனை விளைவிக்கப் பல்வேறு முறைகளில் முனைகின்றனர், உடனிருந்து கொண்டே வேதனை விளைவிக்கவும் சிலர் உளர்.

ஆகையால், ஒவ்வோர் நாளும் நாளை என்ன ஆகுமோ, இன்றே நாம் நம்மாலான நல்ல தொண்டினைச் செய்து முடித்து விடுவோம் என்ற பொறுப்புணர்ச்சியையும், கடமையுணர்ச்சியையுந்தான் நாம்பெறவேண்டும், நாளை, நாளை என்பது கூடாது; இன்றே நாம் நமது கடமையைசெய்யவேண்டும்.

- அறிஞர் அண்ணா

## முதல்வர்புரட்சித்தலைவர் நீடூழி வாழ நடந்த கூட்டுப் பிரார்த்தனை

சென்னை, பிப். 4— முதல்வர்புரட்சித்தலைவர் நீடூழி வாழ சென்னையில கூட்டு பிரார்த்தனை நடைபெற்றது.

கோடானு கோடி மக்களின் பிரார்த்தனை வலிவால் முப்பிறவி கண்டு மூன்றாம்முறையாக முதல்வர் புரட்சித்தலைவர் தயாகம் திரும்பிய நாள் இன்று.

அந்தத்தலைவரும் அவர்தம் நெஞ்சில் குடியிருக்கும் மக்களும் அனைத்துச் செல்வங்களும் பெற்று பூரண நலத்துடன்திகழ சென்னை நகரில் தமிழகத்திலேயே இதுவரை நடைபெறாத அளவு நேற்று (3ந்தேதி) காலை முதல் இன்று (4ந்தேதி)காலைவரைதொடர் யாகம் நடைபெற்றது.

பல்வேறு மதத்தவரும் பங்கேற்ற இந்த கூட்டுவழிபாட்டு வேள்வி நிகழ்ச்சி இன்று காலை முடிந்தது.

### ஜானகி அம்மையார் பங்கேற்பு

இந்த நிகழ்ச்சியில் முதல்வர் புரட்சித் தலைவரின் துணைவியார் ஜானகி அம்மையார் பங்கேற்றார். முதல்வரின் துணைவியார் ஜானகி அம்மையார் இந்த நிகழ்ச்சியில் பங்கேற்க அதிகாலை 5-20 மணிக்கு யாகம் நடக்கும் மைதானத்திற்கு வந்தார். சுமார் 2 மணிநேரம் யாக நிகழ்ச்சியில் பங்கேற்றார்.

முதல்வர் புரட்சித் தலைவரின் துணைவியார் ஜானகிஅம்மையார் பூரண மரியாதையுடன் வரவேற்கப்பட்டார். முதல்வரின் துணைவியார் ஜானகி அம்மையாருக்கு பட்டு சால்வை அணிவிக்கபட்டது இந்த சால்வையைகோவை தம்பியின் துணைவியார் சீதா கோவைத் தம்பி முதல்வரின் துணைவியாருக்கு போர்த்தினார்.

இந்நிகழ்ச்சியில் அமைச்சர் ராசாராம். திட்டக்குழு துணைத் தலைவர்பாவலர் முத்துசாமி, மேலவைத் தலைவர் ம. பொ, சி. மேலவை கொறடா ஜேப்பியார்வாரியத்தலைவர்கள் சுலோசனா சம்பத், கல்யாணி ராமசாமி, சட்டமன்ற உறுப்பினர் வளர்மதி மற்றும் கு.க. செல்வம் தி.நகர் மூர்த்தி ராஜலட்சுமி பார்த்தசாரதிஉள்ளிட்ட பலரும் பங்கேற்றனர்.

இந்த நிகழ்ச்சி பற்றி சென்னை காளிகாம்பாள் கோயில் தலைமை அர்ச்சகரும், யாகநிகழ்ச்சியை தலைமை ஏற்று நடத்திய வருமான சாந்தமூர்த்தி சிவாச்சாரியார் நிருபர்களிடம் கூறியதாவது:-

நள்ளிரவு 1 மணிக்கு சண்டிஹோம பிரார்த்தனை தொடங்கியது. தொடர்ந்து கன்னியா பூசை, தம்பதி பூசை, சுபாஷினி பூசை நடைபெற்றது.

கிறித்தவ, முஸ்லிம் மதக் குருமார்களும் அவரவர் மதப் பிரார்த்தனைகளையும், தொழுகைகளையும் மேற்கொண்டனர் உலகில் வாழும் உயிரினங்கள் தாவரங்கள் வளமாக இருக்க வ. சோ. த் தார ஹோமம் நடைபெற்றது. மீனாட்சி அம்மன் காளிகாம்பாள் கோவில், திருவேற்காடு கருமாரி அம்மன், மாங்காடு அம்மன் பழனி, சமயபுரம்பார்த்தசாரதிகோவில், ஒப்பிலியப்பன்கோவில், நாச்சியார் கோவில், ரத்னகிரிகோவில், ஆகிய ஆலயங்களின் பிரசாதங்களும் வழங்கப்பட்டன.

இவ்வாறு சாந்தமூர்த்தி சிவாச்சாரியார் கூறினார்,

## நிறைகுடம் எம். ஜி. ஆர்.

-: கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் :-

பூமழை தூவிப் பா மழையாலே
புரட்சித் தலைவரைப் போற்றிடுவோம்;
பூமியின் புனித மாமனிதர் எனப்
புகழின் கொடியை ஏற்றிடுவோம்
எவரையும் கவரும் வசீகரத் தோற்றம்
ஏற்றவர் டாக்டர் எம். ஜி. ஆர்.
புவியினில் சமத்துவம் நிலைத்திட உழைக்கும்
புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர்.
சிறந்த ராஜதந்திரி எனவே
தேயம் போற்றும் எம். ஜி. ஆர்.
நிறைகுடம் அன்பின் உறைவிடம் என்றும்
நேர்மை காப்பவர் எம், ஜி, ஆர்.
ஆற்றலின் இளமையும் அனுபவக் கனிவும்
அமைந்தவர் டாக்டர் எம். ஜி. ஆர்.
நேற்றும் இன்றும் நாளையும் மக்கள்
நெஞ்சம் கவர்பவர் எம். ஜி. ஆர்.
மூன்றாம் பிறவி எடுத்தவர் மீண்டும்
முதல்வர் எனப்புகழ் தொடர்கின்றார்;
சான்றோர் வரிசையில் முதலிடம் வகிக்கும்
தனிப்பெருந் தலைவர் எம். ஜி. ஆர்.
அனைத்து மக்கள் சக்தியின் பலத்தால்
ஆயுள் பலமே பெறுகின்றார்
நினைத்ததை முடிக்கும் மனத்துணிவாலே
நீடு வாழ்க எம். ஜி. ஆர்.

### எம். ஜி. ஆர். கைராசி

கண்ணிமைபோல் ஏழைகளைக் காக்கின்ற கையே;
கைமாறு கருதாமல் வழங்குகின்ற கையே;
மண்மணக்கும் கலைகள் எல்லாம் வளர்க்கின்ற கையே;
வாஞ்சையுடன் நேயர்களைத் தழுவுகின்ற கையே;
எண்ணியதைச் செயலாக்கும் எழுச்சிகொண்ட கையே
இரண்டுவிரல் 'இரட்டைஇலை' எழில் வெற்றிக் கையே
எண்ணரிய குடும்பவிளக் கேற்றிவைத்த கையே
இணையற்ற கலைவள்ளல் எம். ஜி. ஆர். கையே



### அறிவும்-செயலும்

உலகில் செயல்கள் நிறைய நடக்கின்றன. அறிவோடு கூடிய செயல்கள் தாம் பயன் மிக்குடையதாக இருக்கும்,

—பேரறிஞர் அண்ணா

### பாராட்டு

சிறந்த காரியம் ஒருவர் செய்துள்ளார். அவர் நமக்கு எதிர்ச்சாரியில் உள்ளார். அதனால் அவரைப்பாராட்டக் கூடாது என்பதில்லை.

—தந்தைபெரியார்

# இலங்கை: கடும் போர்

## 4-வது நாளாக தொடர்கிறது

கொழும்பு. பிப். 4— இலங்கையில் விடுதலைப் புலிகளுக்கும் சிங்கள ராணுவத்திற்கும் இன்று 4வது நாளாக கடும்போர் நடந்து வருகிறது

சிங்கள ராணுவத்தில் வெளிநாட்டில் பயிற்சி பெற்ற கொரில்லாக்களும் சேர்ந்து யுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர். வெளிநாட்டு சிப்பாய்களையும் சேர்த்துக் கொண்டு சிங்கள ராணுவம் களத்தில் குதித்துள்ளது.

என்றாலும் விடுதலைப் புலிகள் வீரத்தின் முன் சிங்கள ராணுவம் நிற்க முடியவில்லை.

மறைந்திருந்துதாக்குதல் நடத்தும் நிலை மாறி, நேருக்கு நேர் நின்று இருதரப்பும் யுத்தத்தில்இறங்கியுள்ளது.

இதில் 30 ராணுவ சிப்பாய்கள் கொல்லப்பட்டுள்ளனர். விடுதலைப்புலிகள் தரப்பில் சேதம் இல்லை.

ஆனால் சிங்களராணுவ ஹெலிகாப்டர்களும் விமானங்களும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் குண்டு வீசுகின்றன. இதில் பல அப்பாவிமக்கள் இறந்தனர். கடற்படையினரும் தாக்குதலில் இறங்கியுள்ளனர் கிளி நொச்சி பகுதியில் ஏராளமான தமிழர்களை சிங்கள ராணுவம் சிறை பிடித்துள்ளது.



பேரறிஞர் அண்ணா நினைவு நாளையொட்டி சென்னையில் கழகம் நடத்திய மவுன ஊர்வலத்தில் கலந்து கொண்ட அமைச்சர் பெருமக்களும், கழக முன்னணியினரும் பல்லாயிரக்கணக்கான தோழர்களும்,

# மத உணர்வுடன் விளையாடும் ஆரூரார்

"அண்ணா நினைவு நாளும் ஆன்மீக வேள்வியும்" என்று எழுதி, புரட்சித்தலைவர் மீது மக்கள் கொண்டுள்ளபாசப்பிணைப்பை- குடும்பபாசத்தை மிகவும் கொச்சைப் படுத்தி இருக்கிறார் கருணாநிதி.

புரட்சித்தலைவர் நலம்பெற வேண்டும் என்று நாடே பிரார்த்தித்து மதமாச்சரியம் இன்றி சர்வ சமய மக்களும் பிரார்த்தனை நடத்தினர்.

புரட்சித்தலைவர் நலம் பெறவேண்டும் என்று நாடே பிரார்த்திக்கிறது நானும் பிரார்த்திக்கிறேன் என்றார் மறைந்த பிரதமர் அன்னை இந்திரா அவர்கள்.

மக்கள் பிரார்த்தனையால் முப்பிறவி கண்டு முழுமதியாய் சென்ற ஆண்டு பிப்ரவரி 4-ந்தேதி புரட்சித்தலைவர் தமிழகம் வந்திறங்கிய நாளை மக்கள் நினைவு கூர்ந்து இறைவனுக்கு நன்றி தெரிவித்து இன்றும் பிரார்த்திக்கிறார்கள்.

இதற்கும் அரசுக்கும் சம்பந்தம் இல்லை.

அனைத்து மதப் பிரார்த்தனையாக நிகழ்ச்சிகளை ஆங்காங்கே மக்கள் நடத்துகிறார்கள் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம் நடத்திடவில்லை'

புரட்சித்தலைவர் நலம் பெற எவரும் சொல்லாமலேஎல்லோர்கால்களும்அன்றுஆலயங்களைநோக்கி நடந்ததுபோல், இப்போதும்இறைவனுக்குநன்றி தெரிவித்தும்புரட்சித்தலைவர் நலம்-மக்கள் நலம் வேண்டியும் அவர்களாகவே பிரார்த்தனை-வேள்விகள் நடத்துகிறார்கள். அது அவர்களுடைய நம்பிக்கை-உரிமை.

இறை நம்பிக்கையுள்ளவர்கள் - இதயம் உள்ளவர்கள் புரட்சித்தலைவர் நீடுழி வாழ வேண்டும் என்று வழிபாடு-யாகம்-வேள்வி நடத்துகிறார்கள்.

இப்படி வழிபாடு - யாகம் - வேள்வி நடத்த வேண்டும் என்று புரட்சித்தலைவர்கேட்கவில்லை.

அரசியல் வேறுபாடுகளுக்கு அப்பாலும்-மத எல்லைகளுக்கு அப்பாலும் புரடசித்தலைவரை தெய்வமாக வணங்கும் கோடானுகோடி மக்கள் "இறைவா!எங்கள் இதயதெய்வம் பொன்மனச் செம்மல் புரட்சித்தலைவருக்கு நீண்ட ஆயுளைத் தந்திடுவாய்" என்று உடல் உருக உள்ளம் உருக வழிபாடு நடத்துகிறார்கள்.

தெய்வத்தை யாக குண்டமாக்கி - கண்களை ஒளிவிளக்காக்கி இறை நம்பிக்கையுள்ள ஈரமுள்ள நெஞ்சினர் வழிபாடு நடத்துகிறார்கள்.

இதனைக் கண்டு திருவாளர் கருணாநிதி ஏன் தமது இதயத்தை ரணமாக்கிக்கொள்கிறார்?

இந்து - கிறிஸ்தவ - முஸ்லிம் இன்னபிற மதங்களைச் சேர்ந்தவர்கள் நடத்தும் வேள்வியை, கொச்சைப்படுத்தப் பார்க்கிறார் கருணாநிதி. தனது அயோக்கியத்தனத்துக்கு அண்ணாவின் பெயரைத் துணைக்கழைத்திருப்பது தான் வேடிக்கையாக இருக்கிறது.

அண்ணாவின் பெயரையே மறைத்துத் தன் பெயரைத் தம்பட்டம் அடித்தவர் திருவாளர் கருணாநிதி. அவர் வழிமறந்து அண்ணாசாலையையேவளைத்துப் போட்டுக் கொண்ட கருணாநிதி தான், அம்மா-அப்பாவைக் கொன்றவன் "நான்அனாதையாகி விட்டேனே" என்று அலறுவது போல கூப்பாடு போடுகிறார்.

அங்காள பரமேசுவரிக்குக் கண்ணடக்கம் சாத்திவிட்டு இப்போது 'திடீர்' நாத்திகராக மாறி மக்களின் மத உணர்வை எள்ளி நகையாடும் கருணாநிதிக்கு மக்கள் பதிலளிக்கும் நாள் தான் பிப்ரவரி 23.

மக்கள் விரோதி கருணாநிதியின் மிச்சசொச்ச அரசியலுக்கும் மக்கள் முற்றுப் புள்ளி வைக்கும் நாளை ஆவலுடன் எதிர் பார்த்திருப்போமாக!

## ஷில்லாங்கில் போப்

ஷில்லாங்- பிப். 4— இந்தியாவில் சுற்றுப் பயணம் செய்து வரும் போப் ஜான்பால் இன்று காலை ஷில்லாங் போய் சேர்ந்தார் அவரை ஆளுநர் பீஷ்ம நாராயண்சிங்கும், முதல்வர் சங்மாவும் வரவேற்றனர்.

ஐந்து லட்சத்திற்கும் மேற்பட்ட மக்கள் பங்கேற்ற பிரார்த்தனைக்கூட்டத்திலும் போப் பங்கேற்றார்

## போப்புக்கு வில், அம்பு, பரிசு

ராஞ்சி, பிப். 4— ராஞ்சிக்கு போப்ஜான்பால் நேற்று விஜயம் செய்தார், லட்சோபலட்சம் மக்கள் போப்பை அன்புடன் வரவேற்றனர்.

போப்புக்கு வில், அம்பு ஏர் கலப்பை, பசுமதி அரிசி ஆகியவற்றை மக்கள் அன்புப் பரிசாக வழங்கினர். போப் இந்தப் பரிசுகளை அன்புடன் பெற்றுக் கொண்டார்.

## கழகத்தில் இணைந்த தி.மு.க. கலைக்குழு

சென்னை, பிப். 4— மதுரை தங்கராசுகலைக் குழுவினர் கடந்த 30 ஆண்டுகளாக தி.மு.க.வுக்கு பணியாற்றியவர்கள்

இந்தக் குழுவினர் கழக பொதுச் செயலாளர் எஸ். இராகவானந்தம் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர். அப்போது பொருளாளர் மாதவன் உடனிருந்தார். மற்றும் திருவை அண்ணாமலை, ஐசரி வேலன் ஆகியோரும் உடனிருந்தனர்

## சென்னையில் நகை கொள்ளை

சென்னை, பிப். 4— சென்னை பூக்கடை பகுதியில் உள்ள ஒரு நகைக் கடையை கள்ளச் சாவி போட்டு திறந்து ரூபாய் 3 லட்சம் பெறுமான முள்ள நகை கொள்ளையிடப்பட்டது.

# இலவச மின் வழங்கும் தமிழக அரசு திட்டம்: உயர்நீதி மன்றம் தீர்ப்பு

சென்னை. பிப் 4— தமிழகத்தில் உள்ளசிறிய விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் சப்ளைசெய்ய புரட்சித் தலைவர் அரசு அறிவித்திருப்பது சரியானதே என்றுசென்னை உயர் நீதி மன்றம் தீர்ப்பளித்துள்ளது.

தமிழகத்தில் உள்ள விவசாயிகள் மேன் மேலும் பொருளாதாரத்தில் முன்னேற்றம் அடைய வேண்டும் என்ற கருத்தின் அடிப்படையில்புரட்சித்தலைவர் அரசு பல்வேறு திட்டங்களை செயல்படுத்தி வருகிறது.

மின்சாரத் தட்டுப்பாட்டால் சில பகுதிகளில் விவசாயிகள் பாதிக்கப்பட்டனர். பம்புசெட்டுகள் இயங்க தாமதம் ஆனதால் பயிர்களுக்கு தண்ணீர் இறைப்பது பாதிக்கப்பட்டது

இதைத் தொடர்ந்து சிறிய விவசாயிகளுக்கு இலவசமாக மின்சாரம் சப்ளை செய்ய அரசு முன் வந்தது. இதற்கான அறிவிப்பை தமிழக அரசு கடந்த 1984-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 31-ம்தேதி வெளியிட்டது.

இதன்படி 1984ம் ஆண்டு செப்டம்பர் 15ம் தேதி முதல் சிறிய விவசாயிகளுக்கு இலவசமாக மின்சாரம் சப்ளை செய்யப்படும் என்றும் இதர விவசாயிகளுக்கு ஒரு குதிரை ஒட்ட சக்திக்கு (எச். பி.) ஆண்டுக்கு 75 ரூபாய் காண்டிராக்ட் ரீதியில் ஒட்டுமொத்தமாக மின்சார கட்டணம் செலுத்த வேண்டும் என்றும் அறிவிக்கப்பட்டது.

இதை எதிர்த்து மதுராந்தகத்தைச் சேர்ந்த சி ஜி. ராஜாமணி மற்றும் 21 பேர் சென்னை உயர் நீதி மன்றத்தில் வழக்குப் போட்டனர். விவசாயிகளை சிறிய விவசாயிகள், பெரிய விவசாயிகள் என்று அறிவித்து பராபட்சம்காட்டக்கூடாது என்று அவர்கள் தங்கள் மனுவில் குறிப்பிட்டிருந்தனர்.

இந்தரிட்மனுக்களைவிசாரணை செய்த நீதிபதி டி' சத்தியதேவ் தமிழக அரசு வெளியிட்ட அறிவிப்பு சரியானதே என்று தீர்ப்பளித்தார்.

தனது தீர்ப்பில் நீதிபதி மேலும் கூறியிருப்பதாவது:-

இயற்கையின் பாதிப்பால் அதிகம் பாதிக்கப்படுபவர்கள் சிறியவிவசாயிகள்தான்.

பொருளாதாரப்பாதிப்பு அடிக்கடி ஏற்படுவதால் சிறிய விவசாயிகள் அவ்வப்போது தங்களதுவிவசாயத்துக்கான முன்னேற்பாடுகளை செய்து கொள்ள முடிவதில்லை. இது அனைவரும் அறிந்த ஒன்று.

ஒருசில பெரிய விவசாயிகளிடம் சொத்து குவிந்து கிடக்கிறது. அவர்களிடம் நிலப்பரப்பு அதிக அளவில் இருக்கிறது. ஆனால் தங்களிடம் உள்ளமிகக்குறைந்த நிலப்பரப்பை செப்பனிட்டு விவசாயம் செய்வதில் சிறிய விவசாயிகள் பெரிதும் கஷ்டப்படுகிறார்கள். அவர்களுக்கு தேவைப்படும் பணம் கிடைப்பதில்லை. அத்தகைய சிறிய விவசாயிகளுக்கு பாதுகாப்பு அளிக்கும் வகையில் தமிழக அரசு இந்த அறிவிப்பை வெளியிட்டுள்ளது.

இது முற்றிலும் சரியானதே. இவ்வாறு நீதிபதி தனது தீர்ப்பில் குறிப்பிட்டார். "ரிட்" மனுக்களையும் அவர் தள்ளுபடி செய்தார்.

தன்னிடம் உள்ள நிலப்பரப்புக்குத் தக்கபடி தான் விவசாயிகள் தரம் பிரிக்கப்பட்டுள்ளனர். சிறிய விவசாயிகள், பெரிய விவசாயிகள் என்ற பிரிவு இதன் அடிப்படையில் தான் வகைப்படுத்தப்பட்டுள்ளது

இதில் பாரபட்சம் எதுவும் காண்பிக்கப்படவில்லை. சிறிய அளவில் நிலம் வைத்திருப்பவர்கள் சிறிய விவசாயிகள். அவர்களுக்குத்தான் இலவச மின்சாரம் அறிவிக்கப்பட்டுள்ளது.

இது முறையானதுதான். இதனால் பெரிய விவசாயிகளுக்கு நஷ்டம் ஏதும் இல்லை. இந்த அறிவிப்பு அரசியல் சட்டம் 14வது பிரிவுக்கு விரோதமானதும் அல்ல,

இவ்வாறு நீதிபதிசத்தியதேவ் தனது தீர்ப்பில் குறிப்பிட்டுள்ளார்.

## கிரிக்கெட்: விசேஷ ஒலிபரப்பு

புதுடெல்லி, பிப். 4— நாளை (5ந்—தேதி) பாரதத்திற்கும் ஆஸ்திரேலியாவுக்கும் இடையே சிட்னியில் நடைபெறும் முதலாவது இறுதி ஆட்ட கிரிக்கெட் போட்டி நேர்முக வர்ணனையை ரேடியோ ஒலிபரப்புகிறது.

டெல்லியிலிருந்து ஒலிபரப்பாகும் இந்நிகழ்ச்சி நாளை காலை 8-55 முதல் 12-35 வரை பிற்பகல் 1-10 முதல் 4-50 வரை இடம் பெறுகிறது.



## மீஞ்சூர் தேர்தல் பணிகள் தீவிரம்!

பொன்னேரி, பிப். 4— பேரூராட்சி - நகராட்சி ஊராட்சி ஒன்றியத் தேர்தலில் புரட்சித்தலைவர் அவர்களின் வேட்பாளர்களை வெற்றிபெறச் செய்யும் பணியில் கழகத் தொண்டர்கள் தீவிரமாக இறங்கியுள்ளனர்.

புரட்சித் தலைவருக்கு வெற்றிக்கனியை அளிக்கும் வகையில் மீஞ்சூர் ஒன்றியத்தின் கழகப் பணிகள் தீவிரம் பெற்றுள்ளன.

மீஞ்சூர் ஒன்றிய கழக வேட்பாளர் இரா. சர்வேசுவரராவ் சட்டமன்ற உறுப்பினர் குலசேகரன், ஒன்றிய செயலாளர் தத்தை அருள் பொன்னேரி சுதா, மீஞ்சூர் நகரச்செயலாளர் பட்டாபி சுப்பிரமணியம் தொகுதி முழுமையும் சென்று கழகத் தோழர்கள் தோழமைக் கட்சித் தோழர்களுடன் உரையாடினர்.

திட்டமிட்டுத் தேர்தல் பணிகளை முறைப்படுத்திச் செயல்படுத்திட வருகிற ஞாயிற்றுக்கிழமை (9ம்தேதி) காலை 9மணிக்கு பொன்னேரி கன்னையா நாயுடு திருமண மண்டபத்தில் ஒன்றியக் கழகக் கூட்டம் நடைபெறுகிறது என்று ஒன்றிய செயலாளர் தத்தை அருள் தெரிவித்திருக்கிறார்.

ஒன்றியக் கழகப் பிரதிநிதிகள், செயல்வீரர்கள். தோழமைக் கட்சியினர் ஆகியோர் இந்த கூட்டத்தில் கலந்து கொள்கிறார்கள் என்றும் அவர் தெரிவித்திருக்கிறார்.





# தினசரி மூன்றரை ரூபாய் சம்பளத்தில் வேலை பார்க்கும் 1200 ஆசிரியர்கள்

புவனேஸ்வரம், பிப். 4— பள்ளிக்கூட ஆசிரியர்கள் 12 ஆயிரம் பேர் தினசரி 3 ரூபாய் 50 காசு சம்பளத்துக்கு வேலை பார்க்கிறார்கள், இந்த நிலைமை ஒரிசாவில் உள்ளது.

முறை சாராப்பள்ளிகள் ஒரிசாவில் உள்ளன. அதில் 5 லட்சம் மாணவர்கள் படிக்கிறார்கள் இந்தப் பள்ளிகளில் 12 ஆயிரம் ஆசிரியர்கள் - ஆசிரியைகள் வேலை பார்க்கிறார்கள்.

இவர்களுக்கு மாதச் சம்பளம் ரூபாய் 105தான். அதாவது தினசரி மூன்று ரூபாய் 50காசு சம்பளம் பெறுகிறார் ஒருஆசிரியர்.

1980 முதல் அவர்களுக்கு இதே சம்பளம் தான் கொடுத்து வருகிறார்கள்.

பள்ளிகளுக்குப் போக முடியாமல் பாதியில் விட்டவர்களும் கிராமப்புற ஏழைக் குழந்தைகளும் அதில்படிக்கிறார்கள்.

பள்ளிகளில் இந்த ஆசிரியர்கள் முறையாகப் பாடம் நடத்துவதில்லை என்று குற்றம் சாட்டப்படுகிறது. ஆசிரியர்கள்சங்கத்தலைவர் ராமசந்திர புகான் கூறும் போது "105 ரூபாய் சம்பளத்தில் வேலை பார்க்கும் ஆசிரியர்களில் பெரும்பாலானவர்கள் பட்டதாரிகள்" என்று தெரிவித்தார்.

# இலங்கை ராணுவம் - விடுதலைப் புலிகள்

# நேருக்குநேர் சண்டை

## போர் விமானத்தை ராக்கெட் மூலம் சுட்டு வீழ்த்தினர்

கொழும்பு, பிப். 4- இலங்கை கிளிநொச்சிப் பகுதியில் ராணுவத்தினருக்கும், விடுதலைப்புலிகளுக்கும் நேருக்குநேர் சண்டை நடந்து வருகிறது. இதில் விடுதலைப்புலிகள் ராக்கெட் மூலம் போர் விமானத்தை சுட்டு வீழ்த்தினர்.

இலங்கை வடக்குப் பகுதியில் தமிழர்கள் மீது சிங்களராணுவம் குண்டுகளை வீசி பயங்கரத்தாக்குதல் நடத்தி வருகிறது போராளிகளுக்கும், ராணுவத்தினருக்கும் கடும் போர் நடக்கிறது. ஹெலிகாப்டரில் இருந்தும் ராணுவம் குண்டுகளை வீசித்தாக்குகிறது. கடந்த 4 நாட்களில் இதுவரை 100க்கும் மேற்பட்ட தமிழர்கள் கொல்லப்பட்டனர்.

கடந்த 4 நாட்களாக இலங்கை வடக்குப் பகுதியில் கடும் போர் நடந்து வருகிறது கிளிநொச்சிப் பகுதியில் ஊரடங்குசட்டம் அமலாக்கப்பட்டுள்ளது சிங்கள ராணுவத்தினர் தமிழர்கள் பகுதிகளில் புகுந்து துப்பாக்கியால் சுட்டுத் தாக்குகிறார்கள்.

### கிளிநொச்சியில் நேரடி சண்டை

கிளிநொச்சப் பகுதியில் ராணுவத்தினருக்கும் விடுதலைப் போராளிகளுக்கும் நேரடியாக சண்டை நடக்கிறது ராணுவத்தினரும் விடுதலைப் புலிகளும் ஒருவரை ஒருவர் பயங்கரமாகத் துப்பாக்கியால் தாக்கிக் கொள்ளுகிறார்கள். இரு தரப்பினரும் எதிரிகளைச் சுட்டு வீழ்த்துகிறார்கள்.

இதுபோன்ற பயங்கர நரயுச்சண்டை இதுவரை இலங்கையில நடந்ததில்லை.

சிங்கள ராணுவத்தினரை விடுதலைப் போராளிகள் ஆவேசத்துடன் தாக்குகிறார்கள்.

இலங்கை விமானப்படையைச் சேர்ந்த விமானம் ஒன்றையும் விடுதலைப்புலிகள் சுட்டு வீழ்த்தினர்.

பின்னர் விடுதலைப்புலிகள் தங்கள் போராட்டத்தை வாபஸ் பெற்றனா என்றும் சென்னையில் விடுதலை இயக்கத்தினர் தெரிவித்தனர்.

இந்த தாக்குதலில் சுமார் 30 ராணுவ வீரர்கள் கொல்லப்பட்டனர் என்று கூறப்படுகிறது.

இந்த மாதம் இறுதிக்குள் சுமார் 10 ஆயிரம் தமிழர்களையாவது சுட்டுக் கொல்லவேண்டும் என்ற திட்டத்தின் கீழ் ஜெயவர்த்தனே இந்த படுகொலையை நடத்தி வருகிறார் என்று விடுதலை இயக்கத்தினர் குறிப்பிட்டனர்.

### தமிழர்களின் வீடுகள் சூறை

சிங்கள ராணுவத்தினர் தமிழர் வீடுகளை சூறையாடினர். கிளிநொச்சிப் பகுதியில் தமிழர்கள் வேறு புகலிடம் தேடி ஓடினர். ஹெலிகாப்டர் விமானங்களில் இருந்து ராணுவம் தமிழர்களின் வீடுகள் மீது குண்டுகளை வீசித் தாக்கியது.

தமிழ் போராளிகள் ராணுவத்தினர் மீது தாக்குதல் நடத்தியதில் ராணுவம் திருப்பித் தாக்கியது என்று இலங்கை ராணுவ அமைச்சர் அதுலத்முதலி கூறினார்.

தமிழர் பகுதியில் ஏராளமான வீடுகள் நாசம் அடைந்தன இதுவரை சுமார் 100க்கும் மேற்பட்ட தமிழர்கள் கொல்லப்பட்டனர் என்றுஒரு செய்தி கூறியதுசுமார்60போராளிகள் கொல்லப்பட்டனர். என்று ராணுவ அதிகாரி ஒருவர் கூறினார்.

கிளி நொச்சி மாவட்டம் தர்மபுரம் பகுதியில் தான் ஏராளமான போராளிகள் கொல்லப்பட்டனர்.

தோட்டத் தொழிலாளர்கள் வசிக்கும் பகுதிகளிலும் சிங்கள ராணுவம் குண்டு வீசித்தாக்கியது.

இந்தத் தாக்குதல்களை ஜெயவர்த்தனே முன் கூட்டியே திட்டமிட்டு நடத்தி வருகிறார் என்று தமிழர் விடுதலை இயக்கத்தினர் கூறினர்.

போர்நிறுத்த ஒப்பந்தம் ஒரு சிறிய அளவு கூட இலங்கையில் கடைப்பிடிக்கப்படவில்லை. சமரச பேச்சுக்கும் இலங்கைஅரசு சம்மதிக்கவில்லை.

தமிழர் விடுதலை ஐக்கிய முன்னணியினர் கொடுத்துள்ள திட்டத்தை எந்த அளவுக்கு இலங்கை அரசு ஏற்றுக் கொண்டுள்ளது என்பதற்கும் ஜெயவர்த்தனே முடிவான பதிலை கொடுக்கவில்லை

விடுதலைப் புலிகள் மீது நடவடிக்கை எடுத்து வருகிறோம் என்று சொல்லிக் கொண்டுஅப்பாவித்தமிழர்களை சுட்டுக் கொன்று வருகிறது.

தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதற்கு இந்தியா கடும் கண்டனம் தெரிவித்துள்ளது. ஆனால் இந்தியாவின் கண்டனத்தை ஜெயவர்த்தனே மதிக்கவில்லை என்றே கூறப்படுகிறது

தமிழர் பகுதிகளில் தமிழர்களின் தொகையை பெரும் அளவுக்கு குறைப்பதிலேயே ஜெயவர்த்தனேவும் பாதுகாப்பு அமைச்சர் அதுலத்முதலியும் கருத்தாய் இருக்கிறார்கள்

ராணுவத்தினர் தமிழர்களின் வீடுகளில் நுழைந்து தமிழர்களை வெளியே இழுத்துப்போட்டு அடிக்கிறார்கள்.

திருகோண மலையில் மட்டும் 40 தமிழர்கள் கொல்லப்பட்டனர்.

திருகோணமலைப் பகுதியில் முப்படையினரும் மும்முரமாக தாக்குதல் நடத்தினர் கப்பல் படை விமானப் படை, தரைப் படை இப்படி அனைத்துப் படையினரும் தமிழர் பகுதிகளில் பயங்கர தாக்குதல்களை நடத்தி வருகிறார்கள் இலங்கை போக்குக்கு இந்தியா கடும் கண்டனம் தெரிவித்துள்ளது. இனப் படுகொலையை நிறுத்தாத வரை இலங்கையுடன் எந்த விதமான பேச்சுவார்த்தையும் இல்லை என்றும் இந்தியா தெரிவித்துள்ளது

தமிழர் விடுதலை இயக்கத்தினர் அளித்துள்ள திட்டத்துக்கு ஒரு முடிவான பதிலை இலங்கை தெரிவிக்காதவரை இந்தியா இலங்கை அரசுடன் பேச்சுவார்த்தை நடத்தாது. என்றும்தெரிவிக்கப்பட்டுள்ளது.

## பிரதமரின் ஆலோசகராக எம். ஜி. கே. மேனன்நியமனம்

புதுடெல்லி, பிப். 4— மத்திய திட்டக்கமிஷனின் உறுப்பினராக இருக்கும் பிரபல விஞ்ஞான மேதை பேராசிரியர் எம். ஜி. கே. மேனனுக்கு புதிய பதவி கொடுக்கப்பட்டுள்ளது.

பிரதமர் ராஜீவ்காந்தியின் விஞ்ஞான ஆலோசகாரக அவர் நியமிக்கப்பட்டுள்ளார். இதை மத்திய அரசு அறிவித்துள்ளது. நாட்டில் விஞ்ஞானம், தொழில் நுட்பம் ஆகியவை மேன் மேலும் வளர்ச்சி அடைய வேண்டும் என்று பிரதமர் ராஜீவ் வலியுறுத்தி வருவதைத் தொடர்ந்து இந்த நியமனம் செய்யப்பட்டுள்ளது. திட்டக்கமிஷன் உறுப்பினர் பதவிக்கு புதிய நபர் நியமிக்கும் வரைஎம்.ஜி.கே. மேனன் அந்தப் பதவியையும் தொடர்ந்து பார்த்து வருவார்.

## அமிர்தசரஸ் அருகே 2 பேர் சுட்டுக்கொலை

அமிர்தசரஸ், பிப். 4— அமிர்தசரஸ் அருகே தார் சிக்கா கிராமத்தில் நேற்று இரண்டு பேர் துப்பாக்கியால் சுட்டு கொல்லப்பட்டனர் இறந்தவர்களில்ஒருவர் இந்திரா காங்கிரசைச் சேர்ந்த பிரமுகர் அவருடைய பெயர் அரிஷா.

இந்த 2 பேர்களும் ஒரு தேனீர் கடையில் உட்கார்ந்து கொண்டிருந்த போது 2 சீக்கிய பயங்கரவாதிகள் அவர்களை துப்பாக்கியால் சுட்டதாகக் கூறப்படுகிறது.





# கல்கத்தாவில் அன்னை தெரசா-போப் சந்திப்பு

கல்கத்தா, பிப். 4— இந்தியா வந்திருக்கும் போப் நேற்று கல்கத்தாவில் அன்னைதெரசாவை சந்தித்தார் போப்பின் காலில் விழுந்து வணங்கிய அன்னைதெரசாவின் தலையில் போப் முத்தமிட்டு ஆசி வழங்கினார்.

இந்தியாவில் 10 நாள் சுற்றுப்பயணம் செய்ய வந்திருக்கும் கத்தோலிக்க போப் கிறிஸ்துவ மதத் தலைவா போப் நேற்று டெல்லியில் இருந்து பீகார் மாநிலம் சென்றுவிட்டு பின்னர் மேற்கு வங்காள தலைநகரான கல்கத்தாவுக்கு சென்றார்,

அங்கு போப்பிற்கு அன்பான வரவேற்பு அளிக்கப்பட்டது.

இறங்கியதும் அவருக்கு மேற்கு வங்காள முதல்வர் ஜோதிபாசு பூச்செண்டு கொடுதது வரவேற்றார். கல்கத்தா நகர கிறிஸ்துவ, கார்டினல் லாரன்ஸ், ஆர்ச் பிஷப் ஹென்றி டிசூவா மற்றும் கிறிஸ்தவ பிரமுகர்கள் கூடி இருந்து போப்பை வரவேற்றனர்.

விமான தளத்தில் போப் வருகைக்காக சிவப்பு கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது அதில் நடந்தபடி முதல்வா ஜோதிபாசுவுடன் மெதுவாக பேசிக் கொண்டே வந்த போப்புக்கு நூற்றுக்கணக்கான பள்ளி மாணவ-மாணவிகள் நின்று வரவேற்பு கொடுத்தனர்.

நிர்மலா கென்னடி அனாதை இல்லத்தைச் சேர்ந்த சிறுமி அஞ்சனா சர்கார், தூயமேரிபள்ளியை சேர்ந்த சிறுவன் டேவிட் ஜான் இருவரும் போப்புக்கு மாலை அணிவித்து வரவேற்றனர். அந்த சிறுவர்சிறுமிகளின் நெற்றியில் போப் தொட்டு ஆசீர்வதித்தார்.

பின்னர் போப் விமான நிலையத்தில் இருந்து குண்டுதுளைக்காத கண்ணாடியால் மூடப்பட்ட ஜீப்பில் ஏறி நின்றபடி அன்னை தெரசாவின் "நிர்மல்ஹிரிடே" அனாதை குழந்தைகள் இல்லத்துக்குச் சென்றார்.

அவர் சென்ற பாதை முழுவதும் லட்சக்கணக்கான மக்களும், பள்ளிக்கூட சிறுவர் சிறுமிகளும் ரோட்டில் இருபுறமும் நின்று போப்பை தரிசித்தனர்.

போப்பின் ஜீப் கார் "நிர்மல் ஹிரிடே" இல்லத்துக்கு சென்றதும் அன்னை தெரசா, போப் நின்ற ஜீப்பில் ஏறிஅவரது காலில் விழுந்து வணங்கினார்.

ஆதரவற்ற அனாதை குழந்தைகளுக்கும், நோயினால் வாடும் முதியவர்களுக்கும் தொண்டு செய்து வரும் அன்னை தெரசாவின கைகளை பிடித்து அவரது தலையில் முத்தமிட்டு போப் ஆசி வழங்கினார்.

# உள்ளாட்சித் தேர்தலுக்கு தடை இல்லை

### சென்னை ஐகோர்ட் தீர்ப்பு

சென்னை. பிப். 4— தமிழகத்தில் நகரசபை. பஞ்சாயத்து தேர்தலை நடத்தக்கூடாது என்று உயர்நீதி மன்றத்தில் போடப்பட்டிருந்த அப்பீல் மனுநேற்று தள்ளுபடி செய்யப்பட்டது சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்யவும்அனுமதிமறுக்கப்பட்டது.

தமிழகத்தில் இம்மாதம் 23-ந்தேதி பஞ்சாயத்து மற்றும் நகரசபைதேர்தலகளை நடத்த தமிழக அரசு எற்பாடு செய்து வருகிறது இதை எதிர்த்து அம்பேத்கார் மக்கள்இயக்க தலைவர் வை.பாலசுந்தரம் குடியரசு கட்சிகளைச் சேர்ந்த தலைவர்கள் சுந்தரராஜன், ராஜகோபாலன் ஆகியோர் சென்னை உயர்நீதி மன்றத்தில் ரிட்மனு தாக்கல் செய்திருந்தனர்.

அதில்தாழ்த்தப்பட்டவர்களுக்கு 18 சதவீதமும், பெண்களுக்கு 15 சதவீதமும் இட ஒதுக்கீடு செய்யாமல் தேர்தல் நடத்தக்கூடாது என்று குறிப்பிட்டிருந்தனர்.

இந்த ரிட் மனுக்களை நீதிபதி மோகன் விசாரணை செய்து ஏற்கனவே தள்ளுபடி செய்தார்

இட ஒதுக்கீடு இல்லாமல தேர்தலை நடத்த சட்டசபைக்குஅதிகாரம் உண்டு சட்டசபையின் முடிவில் கோர்ட்டு தலையிடுவதற்கு இல்லை என்று அவர் தீர்ப்பளித்தார்.

இந்த தீர்ப்பை எதிர்த்து வை. பாலசுந்தரம் சென்னை உயர்நீதிமன்றத்தில் அப்பீல் செய்தார்.

தலைமை நீதிபதி எம்.என். சந்தூர்கர், நீதிபதி வெங்கடசாமி ஆகியோர் இந்த மனுவை விசாரணைசெய்துநேற்றுதள்ளுபடி செய்தனர். நீதிபதிகள் தங்கள் தீர்ப்பில் கூறியுள்ளதாவது:-

இட ஒதுக்கீடு கொண்டு வருவதற்கு சட்ட சபைக்கு எந்த அளவில் அதிகாரம் உள்ளதோ, அதே போல் இட ஒதுக்கீட்டை ரத்து செய்யவும் சட்ட சபைக்கு அதிகாரம் உள்ளதுஎனவே இடஒதுக்கீடு செய்து தான் தேர்தலை நடத்தஉத்திரவிட வேண்டும் என்று கேட்க முடியாது.

இவ்வாறு நீதிபதிகள் தங்கள் தீர்ப்பில் கூறியுள்ளனர்.

இந்தத்தீர்ப்பைஎதிர்த்து சுப்ரீம்கோர்ட்டில் அப்பீல் செய்யவும் அனுமதி மறுக்கப்பட்டது

எனவே தமிழ்நாட்டில் ஏற்கனவே அறிவித்தபடி நகர சபை பஞ்சாயத்து தேர்தல்கள் இம்மாதம் 23-ந் தேதி நடைபெறும்.

# 60 லட்சம் பள்ளி குழந்தைகளுக்கு மருத்துவ சோதனை

சென்னை, பிப். 4— தமிழ்நாட்டில் உள்ள 60 லட்சம் பள்ளிக் குழந்தைகளுக்கு மருத்துவ பரிசோதனை செய்யத்திட்டமிடப்பட்டுள்ளது.

தமிழ்நாடு அரசு ஊரக வளர்ச்சித் துறையும், சென்னை ரோட்டரி சங்கமும் இணைந்து பள்ளிக் குழந்தைகள் சருமம் பாதுகாப்பு மருத்துவசோதனை முகாம் இருநாட்களிலும் பரங்கிமலை ஊராட்சி ஒன்றியத்தைச் சார்ந்த செம்பாக்கம் கிராமத்தில் நடத்தினர்.

இம்முகாமின் இரண்டாவது நாள் நிகழ்ச்சி சென்னை ரோட்டரி சங்கத் தலைவர் கே.வி ஷெட்டி தலைமையில் நடைபெற்றது.

தமிழ்நாட்டிலுள்ள 60 லட்சம் பள்ளிக் குழந்தைகளை மருத்துவப் பரிசோதனை செய்ய அரசு திட்டமிட்டிருக்கிறது இந்த மருத்துவப் பரிசோதனைத் திட்டம் மார்ச்மாதம் முதல் தேதி செங்கல்பட்டு மாவட்டத்தில் துவங்கும்எனதமிழ்நாடு அரசு மருத்துவத் துறை டைரக்டர் டி.பி. வேணுகோபால் தெரிவித்தார்.

பள்ளிக்குழந்தைகளைப் பரிசோதனை செய்த மருத்துவக்குழுவிற்கு தலைமை தாங்கிய டாக்டர் டி. ரங்கராஜன் தமது அறிக்கையில்கூறியதாவது:

சென்னைஅரசு மருத்துவமனையைச்சார்ந்த டாக்டர்களும் ரோட்டரி சங்கத்தைச் சார்ந்த டாக்டர்களும் இரண்டு நாட்கள் குழந்தைகளைபற்றிப்மருத்துவப் பரிசோதனைகள் செய்தனர். இரண்டு நாட்களும் 1623 குழந்தைகள் மருத்துவர்களால் பரிசோதனை செய்யப்பட்டனர்இவர்களில்12 குழந்தைகளுக்கு தொழுநோய்இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது இது ஆரம்ப கட்டத்தில இருப்பதால் இதனை விரைவில் குணமாக்கிவிடலாம். 25 சதவிகித பள்ளிக் குழந்தைகள் பல்சொத்தை நோயால் பாதிக்கப்பட்டு இருக்கின்றனர்.

இவ்வாறு அந்தஅறிக்கையில்தெரிவிக்கப்பட்டுள்ளது

முகாம் நிகழ்ச்சியில், ஊரக வளர்ச்சித் துறை செயலாளர் வி. சுந்தரம் கலந்து கொண்டார்.

## நெல் கொள் முதல்: கால நீடிப்பு

சென்னை. பிப். 4— அரசு ஏகபோக நெல் கொள்முதல் செய்வதை பிப்ரவரி 28ந் தேதி வரை நீட்டித்துள்ளது குவிண்டாலுக்கு 35 ரூபாய் ஊக்கத் தொகை தொடர்ந்து கொடுக்கப்படும்.

இதுவரை ஒருலட்சத்து20 ஆயிரம்டன் நெல் கொள் முதல் செய்யப்பட்டுள்ளது என்று ஒருஅரசு அதிகாரி தெரிவித்தார்.

# தொழிற் கல்வியில் தமிழகம் முன்னணி: அரங்கநாயகம் பேச்சு

சென்னை, பிப். 4— தொழிற் கல்வியில் இந்தியாவிலேயே தமிழகம் முன்னணியில் விளங்குகிறது. இந்தியாவில், தொழிற் கல்வி பயிலும் மாணவர்களில் பாதிக்கு மேற்பட்டோர் தமிழகத்தில் உள்ளனர் என்று அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

சென்னை வானொலியில் 'வளரும் தமிழகம்' என்ற நிகழ்ச்சியில் நாளும் வளர்ந்திடும் கல்வி என்ற தலைப்பில் கல்வி அமைச்சர் அரங்கநாயகம் பேசியதாவது:-

1985-86ல் தமிழக அரசு நிதிநிலை அறிக்கையில் கல்வி மானியத்தின் கீழ் ஒதுக்கியுள்ள தொகை ரூபாய் 468 கோடியாகும். இதே அரசின் அவ்வாண்டின் மொத்த செலவான ரூபாய் 23.5 கோடியில் 20 விழுக்காட்டுக்கும் அதிகமாகும். இந்த மானியத் தொகை 10-ஆம் வகுப்பு வரையிலுள்ள குழந்தைகளுக்குச் சத்துணவு வழங்கச் செலவிடுவது பிற செலவினங்கள் உட்பட மொத்தம் 558 கோடி ரூபாயை கல்விக்காக தமிழக அரசு செலவிடுகிறது.

## தமிழக சாதனை

"ஆறாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில், அதாவது 1984-85 க்குள் அனைத்து இந்தியாவிலும் 95 விழுக்காடு 6 முதல் 11 வயது வரையுள்ள சிறுவர் சிறுமியர்களைப் பள்ளியில் சேர்க்க வேண்டும் என்பது இலக்காக இருந்தது.

ஆனால் தமிழகத்தில் 1984-85 இறுதிக்குள் 98.66 விழுக்காடு சிறுவர் சிறுமியர் பள்ளியில் சேர்க்கப்பட்டிருந்தனர். 11 முதல் 14 வயதுத் தொகுதியினரில் 50 விழுக்காடு பள்ளிகளில் சேர்க்க வேண்டுமென்ற இலக்கிற்கும் மேலாக 72.18 விழுக்காடு பள்ளிகளில் சேர்க்கப்பட்டனர்.

பள்ளிகளில் தற்பொழுது குழந்தைகளுக்குக் கற்றுத் தரப்படும் பாடங்கள் ஏட்டறிவு சார்ந்தவையாகவே உள்ளன. அவர்களின் அடிப்படைத் தேவைகளுக்கும் அவர்களின் எதிர்கால வாழ்க்கைக்கும் இக்கல்வி முறை உதவுவதாக இல்லை. தொடர்ந்து படிக்காமல் பல்வேறு கட்டங்களில் பள்ளி வாழ்க்கையை நிறுத்திவிடுபவர்களுக்கு உழைப்பின் நன்மையை மாணவர்கள் உணருவதற்கும், கல்வி முறைக்கும் வாழ்க்கைக்கும் உள்ள இடைவெளியைக் குறைப்பதற்கும் வகைச் செய்யும் வாழ்க்கைக் கல்விக்கான முதலமைச்சர் திட்டம் 1984-85 ஆம் ஆண்டு முதல் சில பள்ளிகளில் செயல் படுத்தப்பட்டுள்ளன. படிப்படியாக இத்திட்டம் 1 முதல் 12 வகுப்புகளில் தொடங்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. மைய அரசு தற்போது உருவாக்க திட்டமிட்டிருக்கும் புதிய கல்விக் கொள்கையும் வாழ்க்கைக் கல்விக்கான முதலமைச்சர் திட்டமும் ஏறத்தாழ ஒரே மாதிரியானவை.

1984-85ல் 969 மேல்நிலைப் பள்ளிகளில் சுமார் 62 ஆயிரம் மாணவர் பல்வேறு தொழிற்கல்வி பாடங்களைக் கற்று வருகின்றனர்.

## அகில இந்தியாவிலும் தொழிற் கல்வி

அகில இந்தியாவிலும் தொழிற்கல்வி பயிலும் மொத்த மாணவர்களில் பாதி பேர் தமிழகத்தில் உள்ளனர். தற்பொழுது "கம்ப்யூட்டர்" என்னும் மின்கணிப்புப் பொறியியல் மற்றும் ஆசிரியர் பயிற்சியும் மேல்நிலைப் பள்ளிகளில் தொழிற் கல்வி வகுப்புகளாகத் துவங்கப்பட்டுள்ளன.

மேல்நிலைக் கல்வி பெறும் வண்ணம்; 644 அரசு மேல்நிலைப் பள்ளிகள் ஒவ்வொன்றிலும் ஆய்வுக் கூடமும் வகுப்பறையும் கட்ட அரசு ரூபாய்12- கோடிக்கு மேல் ஒப்புதல் அளித்துள்ளதும் இதில் 582 கட்டடங்கள் கட்டி முடிக்கப்பட்டுள்ளதும் நமக்குப் பெருமிதம் தரும் செய்தியாகும்.

1985-86 இறுதிக்குள் 7-லட்சம் பேர்களுக்கு எழுத்தறிவு அளிக்க இலக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ளது இதில் 1985 இறுதி வரை 6 லட்சத்து 81 ஆயிரம் பேர் எழுத்தறிவு பெற்றுள்ளனர்.

ஒரு நாட்டின் பொருளாதார வளமை அந்நாட்டின் தொழில்நுட்பக் கல்வி வளர்ச்சியைசார்ந்ததாகும்.

## தொழிற் கல்வி வளர்ச்சி

தமிழ்நாட்டில் தொழில் நுட்பக் கல்வி கடந்த ஆண்டுகளில் பெரும் வளர்ச்சியடைந்துள்ளது. 1978-79 ஆம் ஆண்டு முடிய தொழில் நுட்பக் கல்வித் துறையின் கீழ் 6 பொறியியற்கல்லூரிகளும் 38 பாலிடெக்னிக்குகள் மட்டுமே இருந்தன தற்பொழுது 29 பொறியியற் கல்லூரிகளும். 10 மகளிர் பாலிடெக்னிக்குகள் உட்பட 129 பாலிடெக்னிக்குகள் உள்ளன.

நமது பாரதப் பிரதமர் விருப்பத்திற்கிணங்க நம் நாட்டின் கல்வி முறையை முழுமையாக சீரமைப்பதற்கான முனைப்பான நடவடிக்கைகளில் மைய அரசு மனிதவள மேம்பாட்டு அமைச்சகமானது மாநில அரசுகளுடன் கலந்து ஈடுபட்டுள்ளது

புதிய கல்விக் கொள்கை பற்றி நாடு தழுவிய கலந்துரையாடல்கள் நடைபெற்றுவருகின்றன. அவற்றின் முடிவாக சிறந்த முடிவுகள் எடுக்கப்பட்டு தமிழ்நாட்டில் கல்வி வளர்ச்சி மேலும் சிறந்த முறையில் அமையும்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் பேசினார்.

# பம்மலில் விளையாட்டுப் போட்டி

சென்னை, பிப். 4— பம்மல் இளைஞர் விளையாட்டுக் குழுவின் 4வது ஆண்டு நிறைவு விழா மற்றும் பொங்கல் விழா ஆகியவை நடைபெற்றன. பல்வேறு விளையாட்டுப் போட்டிகள் நடத்தப்பட்டன. போட்டிகளில்வெற்றி பெற்றவர்களுக்கு பம்மல் நல்லதம்பி, பரிசுகளை வழங்கினார்.

பல்லாவரம் போலீஸ் இன்ஸ்பெக்டர் கோட்டீஸ்வரன், கே. ஐ. தாஸ் ஆகியோர் விழாவில் கலந்து கொண்டு பேசினார்.

இளைஞர் விளையாட்டுக் குழுவின் தலைவர் முரளி (டன்லப்) வரவேற்புரை பேசினார். விளையாட்டுக்குழு சார்பில் சேகர் நன்றி கூறினார்.

# நிர்வாண சினிமா தயாரிப்பாளருடன் டெல்லி உளவாளி

காசியாபாத், பிப். 4— டெல்லியில் கைதான உளவாளி ராமசொரூப் புக்கும், புளூ பிலிம் தயாரிப்பாளர் ஒருவருக்கும் இருந்த தொடர்பு அம்பலமாகியுள்ளது.

டெல்லியில் உளவு வேளையில் ஈடுபட்டதாக ராமசொரூப் கைது செய்யப்பட்டது தெரிந்ததே.

அவரோடு தொடர்பு உள்ள நபர்களிடம் விசாரணை நடந்து வருகிறது.

காசியாபாத்தில் மின்னணு தொழிற்சாலை ஒன்றை போலீசார் சோதனையிட்டனர். மலிவு விலை டிரான்சிஸ்டர் செய்யும் கம்பெனி அது. அதன் நிர்வாக இயக்குனர் அலுவலகத்தை சோதனையிட்ட போது 26 நிர்வாண சினிமா படங்கள் (புளூபிலிம்) கைப்பற்றப் பட்டன.

உளவாளி ராம் சொரூப் புக்கும் தனக்கும் தொடர்பு உண்டு என்று அந்த நிர்வாணப் பட அதிபர் கூறினார்.

ராம் சொரூப் உதவியால் சில மின்னணு கருவிகள் இறக்குமதி செய்தேன் என்றும் அவர் கூறினார்.

# போப்ஆண்டவர் புதன் கிழமை முற்பகல் சென்னை வருகிறார்

## லட்சோப லட்சம் மக்கள் நகரில் குவியும் காட்சி

சென்னை. பிப். 4— புதன்கிழமை முற்பகல் சென்னை வரும் போப் ஆண்டவரைத் தரிசிக்க லட்சோப லட்சம் மக்கள் குவிந்த வண்ணம் உள்ளனர்.

இந்தியாவில் சுற்றுப் பயணம் மேற் கொண்டுள்ள போப்ஆண்டவர் நாளை (புதன் கிழமை) முற்பகல் 11 மணிக்கு விமானம்மூலம் மீனம்பாக்கம் வந்து சேர்கிறார் ஆளுநர் குரானா தலைமையில் அரசு மரியாதையுடன் வரவேற்கப் படுகிறார்.

மீனம்பாக்கத்திலிருந்து கார் மூலம் பரங்கிமலை சென்று தோமையர் ஆலயம் செல்கிறார் பரங்கிமலை தோமையர் ஆலயத்தில்ஜெபம்முடித்து விட்டு மலை உச்சி மீது நின்று மக்களை ஆசிர்வதிக்கிறார்.

பிறகு அங்கிருந்து புறப்பட்டு 12-15 மணிக்கு ராஜாஜி மண்டபம் செல்கிறார்

ராஜாஜி மண்டபத்தில் பல்வேறு மதத் தலைவர்களைப் போப் ஆண்டவர் சந்தித்துப் பேசுகிறார்

ராஜாஜிமண்டபநிகழ்ச்சிகளை முடித்துக் கொண்டு போப் ஆண்டவர் ஆர்ச்பிஷப் வீட்டுக்கு பிற்பகல் 1-15 மணிக்கு செல்கிறார். அங்கு அவர் உணவு அருந்துகிறார்.

அங்கு 2 மணி நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டு விட்டு பிற்பகல் 3-15 மணிக்கு சாந்தோம் கதீட்ரல் தேவாலயம் சென்று பிரார்த்தனை செய்கிறார்,

3.40 மணிக்கு மெரீனா கடற்கரைக் கூட்டத்தில் பங்கேற்க வருகிறார்.

கடற்கரையில் பிரார்த்தனைக்கூட்டம் நடைபெறுகிறது.

இந்தக் கூட்டத்தில் ஏறத்தாழ 15 லட்சம் மக்கள் பங்கேற்க சிறப்பான வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

கடற்கரையில் அலங்கார மேடை அமைக்கப்பட்டு இருக்கிறது.

போப் ஆண்டவரை தரிசிக்க தமிழகத்தில் பல மாவட்டங்களில் இருந்தும் மக்கள் வந்து குவிந்தவண்ணம் உள்ளனர்.

ஆந்திரம், புதுவை, கேரளம், கர்நாடகத்தில் பெங்களூர் பகுதி மக்கள் லட்சக்கணக்கில் சென்னை வந்தவண்ணம் உள்ளனர்.

போப் ஆண்டவரை வரவேற்க நகரம் விழாக் கோலம் பூண்டுள்ளது.

போப் ஆண்டவரது 65 வயதைக் குறிக்கும்வகையில் 65 இடங்களில் அலங்கார வளைவுகள் அமைக்கப்பட்டுள்ளன.

மறைமலை அடிகள் பாலத்தில் 65 தேசியக் கொடிகளும், 65 இடங்களில் போப் ஆண்டவர் கொடிகளும் பறக்கவிடப் பட்டுள்ளன.

போப் ஆண்டவர் செல்லும் வழியெங்கும் சாலையின் இருபுறமும் தடுப்புக் கம்புகள் கட்டப்பட்டுள்ளன. இதனால் மக்கள்வசதியாகநின்று பார்க்கமுடியும்

போப் வருகையை ஒட்டி நகரில் சுமார் 15 லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் வந்து குவிவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## நமது மேடை

முப்பிறவி எடுத்து புரட்சித்தலைவர் தாயகம் திரும்பிய இன்று சைதை சி.ஐ.டி. நகர் மதுரைவீரன் கோவில் அருகே, சிறப்புக் கூட்டமும் கலை நிகழ்ச்சியும் நடைபெறுகிறது.

கே.எம். இப்ராஹிம் தலைமை வகிக்கிறார். முன்னிலை ரங்கநாதன், கிருஷ்ணன் வரவேற்பு நடேசபாண்டியன் கோபி. வலம்புரிஜான் எம். பி, சைதை துரைசாமி எம். எல். ஏ மகாலிங்கம், துரை, மார்ட்டின் குரு, இதயமணி, முனுசாமி, கடும்பாடி, மோகன், எம்.எம். ராமு, மற்றும் பலர் பேசுகின்றனர். பலகுரல்முத்துராஜா குழுவினரின் கலை நிகழ்ச்சியும் நடைபெறுகிறது. ஜி. ஸ்ரீதரன் நன்றி கூறுகிறார்.

# சைதையில் அன்னதானம்

சென்னை, பிப். 4— புரட்சித்தலைவர் முப்பிறவி எடுத்து தாயகம் திருப்பிய இந்நன் நாளை முன்னிட்டு சைதை தொகுதியில் விழா கொண்டாடப்பட்டது. சைதை அண்ணாசிலை அருகில் சட்டமன்ற உறுப்பினர் சா. துரைசாமி 1000 பேருக்கு இனிப்பு வழங்கினார். பின்சின்னமலை ரவுண்டானா அருகில் 1000பேருக்கு அன்னதானம் வழங்கினார், இவ்விழாவில் மார்ட்டின், கடும்பாடி-மகாலிங்கம், குரு, இதயமணி முனுசாமி, மோகன், நெல்லிக்குப்பம் டாக்டர் பிரசாத், கோபி மற்றும் பலர் கலந்துகொண்டனர்

# தேனீக்கள் கொட்டி மூவர் சாவு

தியோரியா. பிப். 4— உத்தரபிரதேச மாநிலம் தியோரி அருகிலுள்ள துசிர பத்காட் கிராமம். இந்த கிராமத்தில் மரம் ஒன்றில் தேனீக்கள் கூடுகட்டி இருந்தன. இந்தக் கூடு திடீரென கலைந்து விழுந்ததால் தேனீக்கள் கோபம் கொண்டு அந்தப் பக்கம் செல்வோர் மீது பாயத் துவங்கின. தேனீக்களின் தாக்குதலுக்கு பலியாகி ஒரு குழந்தை உட்பட மூவர் இறந்தனர்

தேனீக்களின் தாக்குதலிலிருந்து தப்பித்துக் கொள்ள அருகிலிருந்த குட்டையிலும் பலர் விழுந்தனர்.

# லண்டனில் சீக்கிய தீவிரவாதிகளுக்கு வலைவீச்சு

லண்டன், பிப். 4— லண்டனில் வசிக்கும் சீக்கியர்களின் தலைவராக திகழ்ந்த தர்சம்சிங்தூர் சுட்டுக் கொல்லப்பட்டதை அடுத்து லண்டன் போலிசார் தீவிரவாதிகள் எனக் கருதப்படுவோரை பிடிக்கும் முயற்சியில்ஈடுபட்டுள்ளனர். சீக்கியர்களில் பலருக்கு பலத்த பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப் பட்டுள்ளன.

# சீனாவில் வளரும் ஆங்கில மொழிமோகம்

பீஜிங், பிப். 4— சீனா நாட்டில் ஆங்கில மொழி மோகம் நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது.

யாரேனும் ஒருவர் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசினால் உடனே அவரைச் சுற்றி பெருங் கூட்டம் கூடிவிடுகிறது தங்களுக்கும் ஓரிரு ஆங்கில வார்த்தைகளைக் கற்றுத் தருமாறு கூறுகின்றனர்.

ஆங்கிலமொழியை சரளமாக பேசத் தெரிந்தவர்களுக்கு சீனாவில் ஏகப்பட்ட மரியாதை தரப்படுகிறது.

ரேடியோ, தொலைக் காட்சிகளில் ஆங்கிலத்தை கற்றுத் தரும் ஆசிரியர்களுக்கும் ஏகப்பட்ட மரியாதை தரப்படுகிறது. பீஜிங்கிலுள்ள ஆங்கிலப் பேராசிரியர் செனின் னுக்கு நாள்தோறும் ஆங்கிலம் கற்க ஆசைப்படுவதாக பலர் கடிதம் எழுதுகிறார்களாம்.

ஆங்கிலம் பேசுவது சீனாவில் ஒரு பேஷனாகவே மாறி இருப்பதாகவும் இது நவீனமயக் கதவுகள் திறக்க வழிவகுக்குமென்று செனின் கூறியுள்ளார் கரெஸ்பாண்டன்ஸ் கோர்சில் சேர்ந்து ஆங்கிலம் படிக்க 1 லட்சம் பேர் விண்ணப்பிதுள்ளார்கள். சீனாவில் ஆங்கில மொழி மோகம் வேகமாக வளர்ந்து வருகிறது.












Edited and Published by K. RAVINDRAN on beha[lf o]f Thangamani Publications and Printed b[y A]ll India Anna D. M. K. Perarignar Ann[a Tr]ust Press at 34, Nelson Manickam Roa[d, M]ADRAS-29